REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**பண்பாடு**

கருத்து வேறுபாடு இருந்தாலும் பாராட்ட வேண்டியதைப்பாராட்டுவது என்பது தமிழ்ப் பண்பாடு.

— பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**சோதனை**

வாழ்க்கை என்பது ஒரு கடமை. சோதனை என்பது அதன் சாதனம்.

— அண்ணல் காந்தி



மலர்: 3 (●) சென்னை 20—7—1979 வெள்ளி (★)❋●❋(★) வெளியூர் 21—7—1979 சனி (●) இதழ்: 272

# அனைத்திந்திய அண்ணா தி.மு.க-'அனைத்திந்திய' அண்ணா தி.மு.க.தான்



## குன்றத்துவிளக்கு

### கா. காளிமுத்து

இந்தியாவின் தலைநகரிலிருந்து வரும் தகவல்களை - ஆவலோடு - அளவற்ற எதிர்பார்ப்போடு - அனைவருமே தெரிந்து கொள்ளத் துடிக்கிற பரபரப்பு ஒவ்வொரு நாளும் அதிகரிக்கிறது.

நாடாளுமன்றத்தில் ஏற்படுகிற மாற்றம் எத்தகையதாக இருந்தாலும் அது சிறு மாற்றமோ பெருமாற்றமோ தடுமாற்றமோ — நிலை மாற்றமோ - ஏமாற்றமோ எதுவாயினும் இந்தியாமுழுமையும் அது பிரதி பலிக்கும், எதிரொலிக்கும்.

இந்தியாவின் அரசியல் சட்டத்தைப் பற்றிப் பல்வேறு கருத்துக்களுண்டு.

அதனை-'அடர்ந்தகாடு' என்றும்-
'ஆயிரங்கால் மண்டபம்' என்றும்-
'வழக்குகளின் ஊற்றுக்கால்' என்றும்-
'வக்கீல்களின் சொர்க்கம்' என்றும்-

பலவகையாக வருணிப்பதுண்டு.

இன்றுள்ள நிலையில் - இந்த அரசியல் சட்ட அமைப்புக்கு உட்பட்டு இயங்குகிற மாநில அரசுகளின் முக்கியமான தலை எழுத்தை-நிர்ணயிக்கும் 'பிரம்மா'வாக நாடாளுமன்றம் இருந்துவருகிறது.

மைய அரசு எப்படியிருந்தாலும் கவலையில்லை. மாநிலத்தின் எல்லைக் கோட்டுக்கப்பால் சிந்திக்கத் தேவையில்லை எனக் கருதுவது அறிஞர் அண்ணா ஒருமுறை குறிப்பிட்டதுபோல், ''வேரைக் கல்லி வெளியே எறிந்துவிட்டுப் பச்சிலைகள் வளர்வதற்குப் பன்னீர் தெளிப்பதற்குச் சமம்.''

எனவேதான் நிலையான மைய அரசு உருவாகிட அமைதியாக அடக்கமாக-ஆர்ப்பரிப்புக்கு இடமில்லாமல்-விருப்பு, வெறுப்போ-காய்தல்-உவத்தலோ இல்லாமல் அண்ணா வழியில்-புரட்சித்தலைவர் முயற்சி மேற்கொண்டிருக்கிறார்.

நாடாளுமன்றத்தில்-இரு ஜனதா-இரண்டு காங்கிரஸ்-கட்சிகளுக்கும்-மார்க்சிஸ்ட் கட்சிக்கும் அடுத்தாற்போல்-பெரும்பான்மை இடங்களைப்பெற்றுள்ள கட்சி-அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்.

பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் போல்-பதினெட்டு நாடாளுமன்ற உறுப்பினர்களைக் கொண்டுள்ள அனைத்திந்திய அண்ணா திமுகழகம் இந்திய அரசியலில் அலட்சியப்படுத்த முடியாத பெரும் சக்தியாகத் திகழுகிறது.

அண்ணா திமுக - 'அனைத்திந்திய' என்ற அடைமொழியைக் கோவைப் பொதுக்குழுவிலே பெற்று-தனது எண்ணத்தையும் - இலட்சிய வரையறுப்பினையும் இமயம்வரை விரிவாக்கிக் கொண்டபோது இகழ்ந்துரைத்தோர், எள்ளி நகையாடியோர், கண் சிமிட்டிக் கேலிப்புன்னகை புரிந்தோர் எத்தனையோ பேர்.

ஆனால் நாம் நம்மை அனைத்திந்திய அண்ணா திமுகழகம் என அறிவித்துக்கொண்டது வெறும் அவசரப்பட்டோ அல்லது அவசரநிலைபற்றி அச்சப்பட்டோ செய்த முடிவு அல்ல என்பதை எப்போதையும் விட இப்போதைய நிகழ்ச்சிகள் தெளிவுறுத்துகின்றன.

தமிழக முதல்வரைத் தரிசிக்க ஒவ்வொரு அரசியல்கட்சித் தலைவராக வந்து கொண்டிருக்கிறார்கள்.

ஏற்கனவே ராஜ் நாராயணும்-சி. சுப்பிரமணியமும் சேர்ந்துவந்து சந்தித்தனர். ஜனதாத்தலைவர் சந்திரசேகர் சந்தித்தார். நேற்று சுவரண்சிங் காங்கிரஸ் சார்பாக சி. சுப்பிரமணியம் ஜனதா சார்பாக பி. ராமச்சந்திரன், இந்திரா காங்கிரஸ் கட்சி சார்பாக ஆந்திர மாநில முதல்வர் சென்னாரெட்டி ஆகியோர் சந்தித்தனர். ஜெகஜீவன் சார்பாக மோகன் தாரியாவும் எம்.ஜி. ஆரைச் சந்தித்தார்.

(மக்கள் செய்தி-வெளியூர் 20-7-79)

அனைத்திந்திய அண்ணா திமுகவைக் கேலி செய்கிற பத்திரிகைகள் கூட 'உண்மை'யை மறைப்பதற்கு முடியாமல் திணறுகின்ற நிலையைக் காணுகிறோம்.

மத்தியில் எந்தவகையில் நிலைமை சரியாக வேண்டுமானாலும் அதற்குப் புரட்சித்தலைவரின் துணை இன்றியமையாத்தேவை-என்பதை எந்தக்கட்சியும் மறுத்திடவில்லை என்பதைத்தான் 'டெல்லி'ச் சேதிகள் செப்புகின்றன.

எங்கு வேண்டுமானாலும் செல்லுபடியாகும் நல்லநாணயமாகப்புரட்சித்தலைவர் திகழுவதைப்பார்த்து உள்ளூர் செல்லாக் காசுகள் ஓசை எழுப்புவதுபற்றி நாம் கவனிக்கத் தேவையில்லை.

வெறும் எண்ணிக்கைக்காக அல்லாமல் மத்தியில் உருவாகிற ஆட்சியில் மாநிலங்களின் எண்ணங்களும் மதிப்புக்குரிய இடம் பெறவேண்டும் என்ற உணர்வோடுதான் புரட்சித்தலைவர் அவர்களோடு ஷேக் அப்துல்லாவும், பாதலும் கூட ஆலோசனை நடத்துகிறார்கள்.

தமிழ்த் திருநாட்டின் தலைவர் ஒருவர் விந்தியத்துக்கு அப்பாலும் நர்மதைக்கு வடக்கேயும் பெருமையோடு மதிக்கப்படத்தக்க நல்ல சூழ்நிலை உருவாகி விட்டது.

குழம்பிய குட்டையிலே மீன்பிடிக்கிற' ஆதாய சிந்தை நமக்கில்லை.

தெளிவும்- திட்ப நுட்பமும். இமயத்திலிருந்து குமரி வரை பார்வையை விசாலப்படுத்துகின்ற அகன்ற நோக்கும் கொண்ட மைய அரசு அமைத்திடவேண்டும் என்பதும்-

அங்கிருந்து அதிகாரம் இங்கே இறக்குமதியாகாமல்-இங்கிருந்து அதற்கு அதிகாரம் வழங்கப்பட வேண்டும் என்பதும்தான் அனைத்திந்திய அண்ணா திமுகவின் தத்துவரீதியான தகைசான்ற கொள்கையாகும்.

அந்தக் கொள்கை வழியில் புரட்சித்தலைவர் நின்று இந்தியாவின் எதிர்காலத்திற்கு வழிகாட்டும் ஒளிச்சுடராய் மின்னுகிறார்.

புரட்சித்தலைவர் ஒரு பிறவிப் பெருந்தலைவர் என்பதை முழுதும் உணர்ந்திட்ட காலம் இது.

அனைத்திந்திய அண்ணா திமுக வெறும் அனைத்திந்திய அடைமொழி 'தாங்கியாக அல்ல-மெய்யாகவே-'அனைத்திந்திய' அண்ணா திமுகதான் என்பதை-இருள்புகுந்த நெஞ்சினர்க்கும் இழித்துரைப்போர்க்கும் எடுத்துரைக்கும் காலம் இது.

எதிர்காலம் இதை இன்னும் தெளிவாக்கும்.

# புரட்சித் தலைவருடன் அரசியல் தலைவர்கள் முக்கிய சந்திப்பு

புதுடெல்லி, ஜூலை 20- தங்கள் தங்கள் அணிக்கு ஆதரவு தரும்படி அரசியல் தலைவர்கள் பலர் புரட்சித் தலைவரிடம் வந்து கோரினார்கள்.



டெல்லி சென்றுள்ள புரட்சித்தலைவரை தினசரி பல தலைவர்கள் வந்து சந்திக்கிறார்கள்.

நேற்று பல கட்சியைச் சேர்ந்த பிற்படுத்தப்பட்ட எம்.பி.க்கள் தூதுக்குழு புரட்சித் தலைவரை சந்தித்தது.

ஜெகஜீவன்ராம் பிரதமர் ஆவதற்கு ஆதரவு கொடுக்குமாறு அவர்கள் கோரினார்கள். ராம்தன் எம்.பி. தலைமையில் அந்த குழு வந்திருந்தது.

அரியானா முதல்வர் பஜன்லால், மார்க்சிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்தி ஆகியோரும் புரட்சித்தலைவரை சந்தித்துப்பேசினார்கள்.



### சவான்

தமிழக அரசின் சிறப்புப் பிரதிநிதி ராசாராம், ஒய். பி. சவானை சந்தித்துப் பேசினார்.

சவான் அழைப்பின் பேரில் அவரை சந்தித்ததாகவும் கழக ஆதரவை சவான் கோரியதாகவும் அவர் நிருபர்களிடம் கூறினார்.

புரட்சித் தலைவரிடம் இதைத் தெரிவிப்பதாக சவானிடம் கூறினேன் என்று ராசாராம் மேலும் கூறினார்.

புரட்சித்தலைவருடன் சவான் தொலை பேசியில் தொடர்பு கொண்டு ஆதரவு கோரினார்.

அகாலிதள எம், பி. பல்லந்த்சிங் ராமூவாலியா சந்தித்துப் பேசினார்.

## தமிழக பரிசு சீட்டு முடிவுகள்

சென்னை, ஜூலை. 20- தமிழ்நாடு பரிசுச் சீட்டு குலுக்கல் இன்று ராஜாஜி மண்டபத்தில் நடந்தது. குலுக்கல் முடிவுகள் வருமாறு:

**டி.என். வரிசை**

முதல் பரிசு (ரூ 50 ஆயிரம்)
979681 (சங்ககிரி)
517008 (சென்னை)
2-வது பரிசு
(ரூ. 10 ஆயிரம்)
042113 கரூர்
049299 (திருமயம்)
560629 (காரைக்குடி)

**டி. ஓ. வரிசை**

முதல் பரிசு ரூ. 50 ஆயிரம்
140811 (மேட்டூர்)
606566 (சேலம்)
2-வது பரிசு ரூ. 10 ஆயிரம்
274300 (ராசிபுரம்)
749498 (சைதாப்பேட்டை)
779213 (பொள்ளாச்சி)

**டி. பி. வரிசை**

முதல் பரிசு (ரூ. 50 ஆயிரம்)
878689 (ஒரத்தநாடு)
215693 (மேட்டுப்பாளையம்)
2வது பரிசு (ரூ. 10 ஆயிரம்)
642836 (லால்குடி)
211223 (கோபி)
705119 (சீர்காழி)

**டி. கியூ வரிசை**

முதல் பரிசு ரூ 50 ஆயிரம்
334125 813007
2வது பரிசு
035019 997884 532178

# சரண்சிங் - சந்திரசேகர் சவான் தலைமையில் புதிய கூட்டணி

## அமைச்சரவை அமைப்பில் புது திருப்பம்

புதுடெல்லி, ஜூலை 20- சவான்- சரண்சிங் இருவரும் கூட்டுமந்திரிசபை அமைக்க முயற்சி செய்துவரும் இந்த நேரத்தில் சரண்சிங் சந்திரசேகர் சந்திப்பு திடீர் என்று நடந்துள்ளது. ஜனதா நாடாளுமன்ற கட்சியின் தலைமையில் இருந்து தேசாய் பிடிவாதமாக விலக மறுத்து வருகிறார். சரண்சிங் பிரதமராக வருவதை ஜகஜீவன்ராம் தடுக்க முயற்சிக்கிறார். இந்த நிலையில் சவான்- சரண்சிங் இருவரின் கூட்டு முயற்சிக்கு சந்திரசேகரும் ஆதரவு தருவாரா என்ற சந்தேகம் தலைநகரில் எழுந்துள்ளது.



தலைநகரத்து அரசியல் நிகழ்ச்சிகளுக்கு சிகரம் வைப்பது போல போட்டி. ஜனதாவின் தலைவரான சரண்சிங்கை ஜனதா கட்சித் தலைவரான சந்திரசேகர் இன்று சந்தித்துப் பேசினார்.

இந்த சந்திப்பின்போது பிஜு பட்நாயக், பகுகுணா, ராஜ்நாராயண், கர்ப்பூரி தாக்குர் ஆகியோர் உடன் இருந்தனர். புதிய அரசு ஒன்றை அமைக்கும் முயற்சியில் ஈடுபடுமாறு காங்கிரஸ் கட்சித்தலைவர் சவானுக்கு ஜனாதிபதி அழைப்பு விடுத்தார்.

மக்களவையில் காங்கிரஸ் கட்சிக்கு 76 எம். பிக்கள் தான் உள்ளனர். சரண்சிங் ஆரம்பித்துள்ள போட்டி ஜனதாவில் 90 எம்பிக்கள் உள்ளனர். பகுகுணாவின் ஆதரவாளர்கள் பெர்னாண்டசின் ஆதரவாளர்கள் ஆகியோரையும் சேர்த்துப் பார்த்தாலும்கூட நிலையான அரசு அமைப்பதற்கான பெரும்பான்மையை சவான், சரண்சிங் கூட்டணியால்பெறமுடியாது.

### இடதுசாரி கூட்டணி

இதற்கிடையில் மார்க்சிஸ்ட், கம்யூனிஸ்ட், புரட்சி சோஷலிஸ்ட், விவசாயிகள் தொழிலாளர் கட்சி பார்வர்ட்பிளாக் ஆகிய கட்சிகள் ஒன்று சேர்ந்து ஒரு அணி அமைத்துள்ளன.

இந்த அணியில் 42 எம். பிக்கள் உள்ளனர்.

இடதுசாரி அணியினர் நேற்றுகூடி மீண்டும்ஜனதா ஆட்சி அமைவதை அனுமதிக்கக் கூடாது என்று கூறியுள்ளனர்.

வகுப்புவாதத்தைஎதிர்க்கிற ஒரு அரசு அமைவதற்கு இடதுசாரி அணி துணை நிற்கும் என்று ஒரு அறிக்கையில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

இந்த அறிக்கையில் பூப்பேஷ் குப்தா, பி. ராமமூர்த்தி உட்பட 9 பேர் கையெழுத்து போட்டுள்ளனர்.

ஆக இடதுசாரிஅணியில் 42 வாக்குகளும் சவான்-

(2 ம் பக்கம் பார்க்க)

# பிடி. கோயங்காமறைவு புரட்சிதலைவர் இரங்கல்

புதுடெல்லி, ஜூலை 20— 'தினமணி, இந்தியன்எக்ஸ்பிரஸ்' பத்திரிகைகளின் அதிபர் ராமநாத் கோயங்காவின் மகன் பகவன்தாஸ் கோயங்கா மரணத்துக்கு புரட்சித்தலைவர் தமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துள்ளார்.

ராம்நாத் கோயங்காவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் அனுப்பியுள்ள இரங்கல்தந்தியில் ''பகவன்தாஸ் மறைவு பத்திரிகை உலகுக்குப் பேரிழப்பாகும் உங்களுக்கும் உங்கள் குடும்பத்தாருக்கும் எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

**பி. சி. கணேசன் கட்டுரை**

2-ஆம் பக்கம்

**அரங்கநாயகம் கட்டுரை**

4-ம் பக்கம்



சென்னை நகரில் மாநகராட்சி சார்பில் இரவு நேரங்களில் நடக்கும் துப்புரவுப் பணியை அமைச்சர் காளிமுத்து பார்வையிடுகிறார்

# அண்ணாவை முதுகில்குத்தியவர்கள் அண்ணாவின் கொள்கைகளை எதிர்க்க அணி திரள்கிறார்கள் !

# பிற்படுத்தப்பட்டோரே! எச்சரிக்கையாக இருங்கள் !!

பெரியார், அண்ணா, காமராஜர் ஆகியோர் சமூகநீதி எந்த அடிப்படையில் அமைய வேண்டுமென்ற பதில் பெரும்பாலும் ஒத்த கருத்து உடையவர்களாகவே இருந்தார்கள்.

அணுகும் முறையிலும், எதற்கு முன்னுரிமை கொடுத்துச்செய்வது என்பதிலும் வேண்டுமானால் அவர்களிடையே கருத்துவேறுபாடுகள் இருந்திருக்கக்கூடும்.

தமிழக அரசின் இந்த உத்தரவை எதிர்க்கின்றவர்கள் அண்ணாவும், பெரியாரும், காமராஜரும் இருந்திருந்தால் இந்த உத்தரவை ஏற்கமாட்டார்கள்; எதிர்ப்பார்கள் என்பது போன்ற பிரமையை ஏற்படுத்த பகீரதப் பிரயத்தனங்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

சமூதாய சமத்துவம் என்பது பொருளாதார சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதுதான் என்கிற விஷயத்தில் முன்னே சொன்ன மூன்று தலைவர்களுக்கு இடையேயும் மாறுபட்டகருத்து இருந்ததில்லை. பிற்படுத்தப்பட்டவர்களைக் கைதூக்கி விட அரசு ஆக்க ரீதியாகச் செயல்பட வேண்டும் என்பதிலும் மக்களுக்குத் தெளிவை ஏற்படுத்த சமூக சீர்திருத்த இயக்கங்களும் அரசியல் கட்சிகளும் தொடர்ந்து பிரச்சாரம் செய்ய வேண்டும் என்பதிலும் இந்த மூன்று தலைவர்களும் தீவிர கவனம் செலுத்தி வந்தார்கள்.

அரசு உத்தரவை எதிர்க்கின்றவர்கள் அண்ணாவின் பெயரைச் சொல்லி அதை எதிர்ப்பதிலிருந்து அவர்களின் பலஹீனம் தெளிவாகிறது.

அண்ணா வாழ்ந்தபோது அவரை அலட்சியப் படுத்த முயன்று தோல்வி கண்டவர்கள் அவர் மறைந்தபிறகு அவருடைய கொள்கைகளை கொச்சைப் படுத்தும் திருப்பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இவர்கள் தான் பிற்படுத்தப்பட்டோரில் ஏழை எளியவர்களாக உள்ளவர்களுக்கு சலுகை காட்ட அரசு போட்டுள்ள உத்தரவை கடுமையாக எதிர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

**அண்ணாவின் நூல்களைப் பரவ விடாமல் தடுத்தவர்கள்- அண்ணாவின் வாழ்க்கை வரலாறு எழுத முயற்சித்தவர்களை எல்லாம் திரைபோட்டு மறைத்துவிட்டு, கூலி எழுத்தாளர்களை அழைத்து தங்களுடைய வரலாற்றை எழுதச் சொல்லி, விழாவுக்கு ஏற்பாடு செய்து வெளியிட்டுக் கொண்டவர்கள் இன்றைக்கு செல்வாக்கு இழந்து போன நிலையில் தள்ளாடும் தங்கள் நிலைக்கு முட்டுக் கொடுக்க அண்ணாவை அழைக்கிறார்கள்.**

அண்ணாவை இவர்கள் ஒருபோதும் விசுவாசித்ததில்லை. தேர்தல் நெருக்கடியின்போது அவர் இவர்களுக்கு தேவைப்படுவார். மக்கள்மன்றத்துக்கு பதில் சொல்ல முடியாதபோது அண்ணாவை மேற்கோள் காட்டி அதன் பின்னே பதுங்கி தங்களை பாதுகாத்துக் கொள்வார்கள்.

அண்ணாவின் கொள்கைகளை சுயநலச் சந்தையில் மானம் கெட்ட முறையில் பேரம் பேசி ஆதாயம் தேடிக் கொண்ட சூதாடிகள் இவர்கள்.

வகுப்புவாரி பிரதிநிதித்துவம் குறித்து அண்ணாவின் நிலை என்ன? இந்த குழப்பவாதிகள் அண்ணாவையும் ஒரு குழப்பவாதி போல் சித்தரித்து அவரை அவமானப்படுத்த முயன்று கொண்டிருக்கிறார்கள்.

## அரசியல்
## சமூகம்
## பொருளாதாரம்

ஆகிய மூன்று முனைகளிலும் அண்ணா தெளிவான கோட்பாடுகளைக் கொண்டிருந்தார். தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் இந்த மூன்று நிலைகளிலும் அண்ணா உருவாக்கிய கொள்கைகளின் உள்ளடக்கத்தைத்தான் 'அண்ணாயிஸம்' என்கிற பெயரால் அழைத்தார்.

திராவிடர் இயக்கத்தின் சமூகப்பார்வை என்ன என்பதை 'ஆரியமாயை' என்கிற நூலில் அண்ணா படம் பிடித்துக் காட்டினார்.

ஆனால் காலப்போக்கில் மாற்றம் நிகழ்ந்தபோது, சரித்திரச் சூழ்நிலைக்கும் காலத்தின் கட்டாயத்திற்கும் ஏற்ப அண்ணா தன்னுடைய நிலைகளை மாற்றிக்கொண்டார். பிராமணியம் என்பது பிராமணர்களிடம் மட்டும் காணப்படும் ஒன்றல்ல,

அந்த மனப்பான்மை பிராமணர் அல்லாதாரான மேல் ஜாதியைச் சேர்ந்த முதலியார், நாயுடு, பிள்ளை போன்ற இதர ஜாதியினரிடமும் உண்டு. இவர்களும் சமூகநீதிக்கு எதிராக செயல்படக் கூடியவர்கள்தான் என்கிற உண்மையை பல சிறு கதைகளிலும் ஓரங்க நாடகங்களிலும் கட்டுரைகளிலும் அண்ணா எடுத்துக்காட்டி இருக்கிறார். அவர் எழுதிய 'வேலைக்காரி' நாடகமும் திரைக்கதையும் இந்த உண்மையை எடுத்துக்காட்ட எழுதப்பட்டவைகள்.

பிராமணர்கள் மட்டுமின்றி, சமூகத்தில் வசதி படைத்த எந்தப் பிரிவினரும் தங்களுக்குக் கீழ் நிலையில் உள்ளவர்களை சுரண்டுவதும் அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதும் எதிர்பார்க்க வேண்டிய ஒன்றே. கண்மூடித்தனமான பிராமண எதிர்ப்பில் அண்ணா ஒருபோதும் நம்பிக்கை வைத்ததில்லை.

இதற்கு ஆயிரம் மேற்கோள்களை காட்ட முடியும்.

அரசியல் நிலையினை விளக்க 'அண்ணா எழுதிய நூல் "லட்சிய வரலாறு."' இந்த நூலில் வடநாட்டு ஆதிக்கம் தென்னாட்டவர்கள் மீது எப்படி உருவாயிற்று, ஏன் உருவாயிற்று, எப்போது உருவாயிற்று ஆகியவற்றை வரலாற்று ஆதாரங்களோடு அண்ணா விளக்கி இருக்கிறார். அந்த அடிப்படையில் திராவிட நாடு பிரிவினை கோரிக்கையினையும் முன்னே வைத்தார். ஆனால் காலத்தின் போக்கில் பிரிவினைக் கோரிக்கை தேவையற்ற ஒன்று என்று கண்டபோது அந்தக் கோரிக்கையினை துணிச்சலுடன் கைவிட்டவர் அண்ணா.

## (((((((( 3 ))))))))

அண்ணா லட்சியங்களை மதித்தார். மக்களின் முன்னேற்றத்தை மையமாக வைத்துத்தான் லட்சியங்களை உருவாக்கினார். லட்சியங்களில் மாற்றம் கண்டால்தான் மக்கள் முன்னேற்றத்துக்கு அது துணை இருக்கும் என்று கண்டபோது துணிந்து லட்சியங்களை மாற்றி அமைத்தார்.

திராவிடநாடு பிரிவினைக் கோரிக்கையைக் கைவிட்ட நிலையிலும் அவர் ஒரு மாபெரும் தலைவராகவே விளங்கினார்.

**காரணம் அண்ணாவுக்குத் தெளிவிருந்தது. யாரையோ எதிர்க்க வேண்டும் என்பதற்காக ஏதோ ஒன்றை லட்சியம் என்று பிரகடனப்படுத்தும் போலித் தலைவர் அல்ல அண்ணா.**

திராவிடர் இயக்கத்தின் பொருளாதாரக் குறிக்கோளை விளக்க அண்ணாஎழுதியது "பணத்தோட்டம்" என்கிற நூல், பொருளாதார ஏற்றத் தாழ்வு அகல வேண்டிய அவசியத்தையும் வசதி படைத்தோர் வசதி அற்றோரை சுரண்டுவதைத் தடுக்க வேண்டிய அவசியத்தினையும் அண்ணா அந்த நூலில் அருமையாக எடுத்துக் காட்டி இருக்கிறார்.

பொருளாதார முனையில் எடுத்த நிலையினை கடைசி வரையில் அண்ணா மாற்றிக் கொள்ளவே இல்லை. காரணம் சமூக அமைப்பில் இன்றுள்ள பல கேடுகளுக்கும் பொருளாதார ஏற்றத்தாழ்வே காரணம் என்பதை உணர்ந்திருந்தவர் அண்ணா.

**மோத வேண்டும் என்பதற்காக யாரோடும் மோதும் பழக்கம் அண்ணாவுக்கு இல்லை. காரணம் அவர் சந்தர்ப்பவாத அரசியல்வாதி அல்ல. கொள்கை நிறைவேற்றத்துக்காக வாழ்ந்தவர்.**

ஆட்சியிலிருந்த காமராஜர் அண்ணாவின் கொள்கைகளை நிறைவேற்றினால் அண்ணா ஓடோடிச் சென்று அவ்வரைப் பாராட்டுவார். காஞ்சிபுரம் நகராட்சி மன்றத்தில் காமராஜரின் படத்தைத் திறந்து வைத்து அண்ணா ஆற்றிய உரையே இதற்குச் சான்று.

'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு' என்று கூறியவர் அண்ணா.

## பி. சி. கணேசன்

தமிழக முதல்வர் புரட்சித் தலைவரை எதிர்க்க வேண்டும் என்பதற்காக, தமிழக அரசு பிற்படுத்தப்பட்டோரின் ஏழை எளியவர்களுக்காக போட்டுள்ள உத்தரவை கண்மூடித்தனமாக எதிர்க்கின்றவர்கள் கடைந்தெடுத்த சந்தர்ப்ப வாதிகள்.

**இவர்களுடைய எதிர்ப்பில் தெளிவில்லை. வாதத்தில் வலு இல்லை. வக்கணையில் நியாயம் இல்லை.**

ஒன்றே ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது- ஆளுங்கட்சிக்கு எப்படியாவது தொல்லை கொடுக்க வேண்டும்.

கூட்டம் நடத்தப்போகிறார்களாம்! போர்ப் பிரகடனம் செய்யப்போகிறார்களாம்!

யாருக்கு எதிராக?

தமிழக முதல்வருக்கு எதிராக என்று சொல்லுகிறார்கள்.

**உண்மையில் இவர்கள் செய்யும் போர்ப் பிரகடனம் தமிழக முதல்வருக்கு எதிரானது அல்ல. பிற்படுத்தப்பட்ட ஏழை எளிய மக்களுக்கு எதிராக இவர்கள் போர்ப்பிரகடனம் நிகழ்த்திக்கொண்டிருக்கிறார்கள்.**

வங்கக் கடற்கரையில்சந்தனப் பேழையில் உறங்கும் அண்ணன் இந்த ஜூடாஸ்களின் செயலைப் பார்த்து கண்ணீர் வடித்துக்கொண்டு தானிருப்பார்.

இந்த எதிர்ப்பாளர்கள் அண்ணாவை மட்டும் எதிர்க்கவில்லை. பெரியாரை எதிர்க்கிறார்கள். காமராஜரை எதிர்க்கிறார்கள். பிற்படுத்தப்பட்ட சமூகத்தையே எதிர்க்கிறார்கள். எப்படி? நாளை பார்க்கலாம்.

(தொடரும்)

# புதிய கூட்டணி

(முதல்பக்கத் தொடர்ச்சி)

சரண்சிங் கூட்டணிக்கு இடைக்கும் என்று மதுலிமாயி போன்றவர்கள் கூறுகிறார்கள்.

காங்கிரஸ், போட்டி ஜனதா, பகுகுணாகோஷ்டி, பெர்னாண்டஸ் கோஷ்டி ஆகியவற்றின் பிரதிநிதிகள் கூடி சவான்-சரண் சிங் கூட்டு அமைச்சரவை அமைப்பதற்கானஏற்பாடுகளைப்பற்றி விவாதித்தனர்.

ராஜநாராயண், பி. சுப்பிரமணியம், மதுலிமாயி, பகுகுணா ஆகியோர் விடுத்துள்ள கூட்டறிக்கையில் 'நிலையான ஜனநாயக மதசார்பற்ற ஒரு அரசு விரைவில் அமைக்கப்படும்' என்று கூறியுள்ளனர்.

சவானுடன் உடன்பாடு ஏற்பட்டது என்ற தகவலை சரண்சிங் கோஷ்டியைச் சேர்ந்த முக்கிய பிரமுகர் ஒருவர் மறுத்தார். சரண்சிங் பிரதமராக வரவேண்டும் என்பதுடன் கூட்டணி கட்சிகளின் தலைவராகவும் சரண்சிங் ஆக்கப்படவேண்டும் என்று சரண்சிங் கோஷ்டிவலியுறுத்துகிறது

இதற்கிடையில் சரண்சிங்கும் மற்றுமுள்ள போட்டி ஜனதா எம்பிக்களும் காங்கிரசில் சேர்ந்துவிடவேண்டும் என்று சில காங்கிரஸ் எம்.பிக்கள்வற்புறுத்துகிறார்கள்.

## ஜெகஜீவன்

இதற்கிடையில் சவான் சரண்சிங் கூட்டு அரசு அமைவதற்கு ஜெகஜீவன் ராம் புதிய முட்டுக்கட்டையை எழுப்பியுள்ளார்.

புதிய அரசு அமைக்குமாறு சவானைத்தான் ஜனாதிபதி அழைத்திருக்கிறார். தன்னால் அரசு அமைக்க முடியவில்லை என்றால் சவான் அதனைத் தெரிவிக்க வேண்டுமே தவிர சரண்சிங் பிரதமராக வருவார் என்று சவான் எப்படிச் சொல்ல முடியும்?

சவானுக்கு ஜனாதிபதி விடுத்த அழைப்பு சரண்சிங்குக்கு பொருந்தாது என்று ஜகஜீவன் புதிய கேள்வி ஒன்றை எழுப்பியுள்ளார்.

சவான் தலைமையில்அரசு அமையவில்லை என்றால் அடுத்துஜனதாவைத்தான் ஜனாதிபதி அழைக்கவேண்டும் என்பது ஒரு சிலரின் வாதம்.

ஜனதாநாடாளுமன்றக் கட்சியின் தலைமைப் பதவியிலிருந்து விலக தேசாய் மறுத்து வருகிறார் தேசாய் நீடிக்கும்வரை அரசு அமைக்குமாறு ஜனதா கட்சியை ஜனாதிபதி அழைப்பது இயலாத காரியம்.

தேசாய் விலகினால் ஜனதா கட்சித் தலைவராக ஜெகஜீவன் தேர்ந்து எடுக்கப்பட்டால் அப்போது போட்டி ஜனதாவிலிருந்து சில பேர் மீண்டும் ஜனதாவுக்கு திரும்பக் கூடும். அந்த பலத்தைக் கொண்டு பெரும்பான்மையுடன் ஜனதாவே அரசு அமைக்கலாம். இந்த வாய்ப்பும் இருக்கிறது.

ஆனால் ஜனதா கட்சி இன்னும் குழப்பத்தில் ஆழ்ந்து கிடக்கிறது. இப்போது பிடிவாதம் காட்டினாலும் ஓரிரு நாட்களில் தேசாய் ஜனதா நாடாளுமன்றக்கட்சி தலைமை பதவியிலிருந்து விலகக் கூடும்.

அப்போதும் கூட ஜனசங்க ஆர். எஸ். எஸ். உறவு பற்றிய சிக்கல் தீரா விட்டால் போனவர்கள் திரும்புவார்களா என்ற கேள்வியும் எழுகிறது. ஆக சவான் - சரண்சிங் கூட்டணி அரசு அமையும் என்றோ ஜனதா சார்பில் ஜகஜீவன் தலைமையில் ஒரு அரசு அமையும் என்றோ திட்டமாக சொல்ல முடியாத நிலையே இன்னும் நீடிக்கிறது.







# சிலம்புச்செல்வர் கண்டனம் (4ம் பக்கத் தொடர்ச்சி)

ளது. ஜனாதிபதிக்கு வந்திருக்கும் தலைவலி பெரியதாக உள்ளது.

மத்திய அரசுக்கு முன் எப்போதும் ஏற்படாத நிலை உள்ளது. இதற்கு மரபுகள் இல்லாது இருப்பது தான் காரணம்.

அரசியலமைப்பில் மரபுகள் தேவை. முரண்பாடுகளில்லாத மரபுகளை நாம் ஏற்க வேண்டும். மாநிலங்களில் பல மரபுகள் இருக்கின்றன.

1953-ம் ஆண்டு தமிழகத்தில் காங்கிரசுக்கு பெரும்பான்மை குறைந்தது, ராஜாஜி சிறிது காலம் அவகாசம் கொடுங்கள் என்று கேட்டுக் கொண்டார். நல்ல தலைவர் சூழ்நிலை இருந்ததால் அது முடிந்தது,

டெல்லியில் அதுவுமில்லாமல் போய் விட்டது.

தமிழகஅரசின் பிற்பட்ட வகுப்பினர் சலுகைபற்றி இன்று பேசப்படுகிறது.

சாதிச் சலுகை வழிவழி பல மாறுதல்களை அடைந்துள்ளது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு சுப்பராயன் சுயேச்சை அமைச்சரவையின் 1920-ம் ஆண்டு அமலுக்குப் பிறகு பல மாறுதல்களை அடைந்துள்ளது.

பிற்பட்டோர் சலுகை விஷயத்தில் அரசின் முயற்சி பிற்பட்டோருக்கு எந்தவிதத்திலும் தடையாக இருக்காது. அந்தப் பிரிவினரில் உள்ள முற்பட்டவர்களுக்கு சலுகை கிடைக்காவிட்டால் உண்மையில் பிற்பட்ட மக்களுக்கு அதிக நன்மை ஏற்பட வழி உள்ளது.

31 சதவிகிதத்தில் ஒரு சதவிகிதம் கூட முற்பட்டோருக்குப் போகாது.

நண்பர் கருணாநிதியை கேட்டுக் கொள்வதெல்லாம் இதுதான்.

எதற்கெடுத்தாலும் போராடுவது நாட்டுக்கு நல்லதல்ல.

வடக்கே என்னென்னவோ நடக்கும் காலத்தில் தமிழகத்தில் போராட்டம் நல்லதா?

இந்த தருணத்தில் நாட்டுமக்கள் தேச பக்தியுள்ளவர்களாக விளங்க வேண்டும்.

இவ்வாறு சிலம்புச்செல்வர் பேசினார்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275. அவ்வைசண்முகம்சாலை.சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004.

ஆசிரியர்: எம்.ஜி.சக்ரபாணி

### இசைக் கலைஞர்களுக்கு அமைச்சர் ஆர்.எம்.வீ வேண்டுகோள்

# தமிழிசையை ஒதுக்காதீர்கள்

**சென்னை, ஜூலை 20- கர்நாடக இசை வேறு தமிழிசை வேறு என்ற மாயத் தோற்றத்தை சிலர் வளர்க்கின்றனர். யாருக்காகப் பாடுகின்றோம் என்பதை உணர்ந்து கொண்டு மக்களுக்காக இசைக் கலைஞர்கள் எப்படிப் பணிபுரிய வேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும் என்று அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.**

சீர்காழி கோவிந்தராஜன் முருகன் கோவில் திருப்பணிக்காக லண்டன் சென்றிருந்தபோது நடத்திய இசை நிகழ்ச்சிகள் இசைத்தட்டாக வெளியிடப்பட்டுள்ளது. இந்த விழா மயிலை உட்லண்ட்ஸ் ஓட்டலில் புதன் மாலை நடைபெற்றது.

எச். எம். வீ. சரஸ்வதி ஸ்டோர்ஸ் சார்பில் நடந்தஇவ்விழாவிற்குமேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் ம. பொ. சி தலைமை வகித்தார்.

விழாவில் அமைச்சர் ஆர். எம். வீ. இசைத் தட்டை வெளியிட அதனை ஏவி. எம். பெற்றுக் கொண்டார். பின்னர் ஏவி. எம். வேண்டுகோளுக்கிணங்க மலேசியாவைச் சேர்ந்த செல்வகணபதிஇசைத்தட்டைப் பெற்றுக்கொண்டார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசும்போது கூறியதாவது:

''தமிழ் இசைத் தென்றல்'' என்று லட்சோபலட்சம்மக்கள்இதயங்களில் இடம் பெற்றவர் சீர்காழி.

லண்டனில் வெஸ்ட் மினிஸ்டர் மைய மண்டபத்தில் வெண்கலக்குரலில் அவர் பாடி பாராட்டுப் பெற்று வந்துள்ளது நம் அனைவருக்கும் பெருமையாகும்.

## ஏவி.எம்.முக்கு பாராட்டு

'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும்வகை செய்தல்வேண்டும்' என்றாரே பாவேந்தர்பாரதி. அதனைச் செய்து திரும்பியுள்ளார் சீர்காழி.

அவர் லண்டனில் முழங்கிய தமிழிசையை இசைத்தட்டாக சிறப்பாக வெளியிடுவர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் சார்பிலும், எனது சார்பிலும் பாராட்டு தெரிவித்துக் கொள்கிறேன்.

மக்களால் பெருமளவு இசைத்தட்டு வரவேற்கப்படுவதற்குசிறப்பாக வெளியிடுவதற்குக் காரணமாக இருந்தவர் ஏவி. எம். அந்தப்பெருமைஅவரையே சாரும்.

சீர்காழி என்றாலே கோவிந்தராஜனைத் தான் குறிக்கும் என்கின்ற அளவிற்கு அவர் புகழ்பெற்று விளங்குகின்றார்.

## மாயத்தோற்றம்

கர்நாடக இசை வேறு தமிழிசை வேறு என்பது போன்ற ஒரு மாயத் தோற்றத்தை- உணர்வுகளை வளர்த்து விடுகின்ற நிலையைப்பார்க்கின்றோம்.

தியாகையர், தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் ஆகிய மூவரையும் இசையுலக மும்மூர்த்திகள் என்று கூறுகின்றனர்.

இவர்களுக்கெல்லாம் முன்பே தஞ்சை மண்ணில் மூன்று இசை மேதைகள் தோன்றினர்.

திருஞானசம்பந்தர், முத்துத்தாண்டவர், மாரிமுத்தாப்பிள்ளை ஆகியோரை இசையில் மூத்த மும்மூர்த்திகள் என்று கூற வேண்டும்.

சங்கீதப்புலவர்கள்ராகங்களே போதும் என்கிறார்கள். அந்த ராகங்களும் இசையும்யாருக்காக? மக்களுக்காகத்தானே என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும்.

மக்களுக்காக இசைக் கலைஞர்கள் எந்தவகையில் எப்படிப் பணிபுரியவேண்டும் என்பதை இசை அறிஞர்கள் முடிவுசெய்ய வேண்டும்.

அப்படித் தமிழிசையில் பாடிப்பாடிப் புகழ் பெற்றவர்கள் பாராட்டுக்குரியவர்கள்மதுரைசோமு, சீர்காழி கோவிந்தராஜன் போன்றவர்கள்தான்!

கர்நாடக இசை வேறு. தமிழிசை வேறு என்று நினைத்ததோடு மட்டுமின்றி தமிழில் பாடுபவர்களை வித்வான்கள் என்று ஒத்துக்கொள்ளாமலே இருந்த காலமும் இருந்தது.

இசைய வைப்பது தான் இசை. யாருடைய இசை மக்களைக்கவர்கின்றதோ அப்படிப்பட்டவர்களைத்தான் இசைக்கலைஞர்கள் என்று ஒப்புக்கொள்ள முடியும்.

சிலர் உரைத்து உரைத்துப்பார்ப்பது போல் தரம் பிரிக்கின்றனர்.

இன்னும் சிலர் பாடுகின்றார்களா இல்லை தேகப்பயிற்சி செய்கின்றார்களா, சர்க்கஸ் செய்கின்றார்களா என்றே புரிந்துகொள்ள முடிவதில்லை.

என்ன இப்படி என்று கேட்டால் ''உனக்கு ஒன்றும் தெரியாது. அவர் மகாவித்வான்'' என்று கேட்பவர்களை ஒன்றும் பேசமுடியாமல் செய்து விடுகிறார்கள். கேட்டால் இது தான் கர்நாடக இசை என்கின்றனர்.

''யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்'' என்றார் பாரதி.

அப்படிப்பட்ட தமிழில், இசையே வடிவான தமிழ் பாடுவதற்கு இன்னமும் சிலர் தயக்கம் காட்டுவதற்குக் காரணம் புரியவில்லை.

இசைய வைக்கிற இசை கேட்கின்றவர்களுக்குப் புரியும்படி இருக்கவேண்டாமா?

தமிழில் பாடவேண்டும் என்றஆர்வம்இருந்தாலும் வித்வான்கள் என்று ஒத்துக்கொள்வதற்காக சிலர் தெலுங்கில் பாடுகின்றனர்.

கோடானு கோடி ரசிகர்கள் சார்பில் நான்கேட்டுக்கொள்கிறேன் - கர்நாடக இசை-தமிழிசை என்று பேதம் பிரிக்காதீர்கள்.

யாருக்காகப் பாடுகின்றோம் - எங்கே இருக்கின்றோம் என்பதைஉணர்ந்து கொள்ளுங்கள்.

தமிழிசைக்குக் களங்கம் கற்பிக்காதீர்கள் ஒதுக்கி விடாதீர்கள்.

அதன் பின்பு மண்டபத்திற்குள் ஒருசிலர் அமர்ந்து கேட்கும் படி தான் இசை இருக்குமே தவிர, மக்கள் மத்தியில் இடம் பிடிக்க முடியாது. வேறு ஏதேதோ வந்து இடம் பிடித்துக்கொள்ளும் நிலைமை



ஏற்பட்டு விடும்.

திருமண வீடுகளில் பெரும்பாலும் ஆர்ச்செஸ்டிராவை வைத்து மெல்லிசை நிகழ்ச்சி நடத்தினால்தான் பத்துபேர் உட்காருகிறார்கள் என்று கூறுகிறார்கள். முக்கியமானவர்கள், கர்நாடக இசையில், தமிழிசையில் பற்றுள்ளவர்கள் வீடுகளில் கூட ஆர்ச்செஸ்ட்ராவுடன் மெல்லிசை நிகழ்ச்சிகள் நடப்பதைப் பார்க்கின்றேன்.

சினிமாவில்கேட்கிறோம் ரேடியோவில் கேட்கிறோம். அப்புறம் அதையே திரு

(4-ம் பக்கம் பார்க்க)

மாற்றுக் கட்சியில் இருந்து விலகிய

## 12 பேர் கழகத்தில் இணைந்தனர்

கடலூர், ஜூலை 19- கடலூர் தொகுதி துணை அமைப்பாளர் அன்பு தண்டபாணியின் திருமணம் ரத்தின பாலகுருசாமி எம்-எல்.சி. தலைமையில் நடந்தது.

கிழக்கு ராமநாதபுரம் பகுதியைச் சேர்ந்த 12 இந்திரா காங்கிரஸ் தோழர்கள் காங்கிரசிலிருந்து விலகி ரத்தின பாலகுருசாமி எம். எல். சி. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

## எவர்சில்வர் வியாபாரிகளிடம் சோதனை

சென்னை, ஜூலை 20- சென்னையிலுள்ளசில எவர்சில்வர் வியாபாரிகளிடம் இம்மாதம் ஜூலை 5 முதல் 7-ந் தேதிவரைவணிகவரித் துறையினர் சோதனைகள் நடத்தினர். இச்சோதனையின் போது மறைத்து வைக்கப்பட்ட ரூ. 31.38 இலட்சமும். வரித்தொகைஏய்ப்பு 2.35 இலட்சமும், அபாரத தொகை ரூ. 7 லட்சமும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது ரூ. 2.27 இலட்ச ரூபாய் முன் வரியாகவும், கூட்டுத் தொகையாகவும் வசூலிக்கப்பட்டது.

# பிச்சைக்காரர்கள் தொல்லையை நீக்க கடும் நடவடிக்கை

### அமைச்சர் பிடி.எஸ். தீவிரம்

**சென்னை ஜூலை 20-தெருக்களிலும், கோயில்களைச் சுற்றிலும் பிச்சையெடுத்துக் கொண்டு பொதுமக்களுக்குத் தொல்லை தருகின்ற தொழுநோய் பிச்சைக்காரர்களையும், பிச்சைக்காரர்களையும் பிடித்துமறுவாழ்வு காப்பகத்திற்கு அனுப்ப அரசு முடிவெடுத்துள்ளது.**

தெருக்களிலும் கோவில் சுற்றுப்புறங்களிலும்பிச்சை எடுத்துக் கொண்டு திரிகிற பிச்சைக் காரர்களையும் தொழுநோய் பிடித்த பிச்சைக்காரர்களையும்மறுவாழ்வு இல்லங்களுக்கு அனுப்புவதுபற்றி ஆலோசிக்க சமூகநல அமைச்சர் பி.டி.சரஸ்வதிதலைமையில் நேற்று (வியாழக்கிழமை) ஆலோசனைக்கூட்டம் நடைபெற்றது.



பிச்சைக்காரர்களைப் பிடித்து மேல்பாக்கம்பாதுகாப்பு இல்லத்திற்கும், தமிழ்நாட்டிலுள்ள பத்து தொழுநோயாளர்மறுவாழ்வு இல்லங்களுக்கும் அனுப்புவதற்கான தீவிர இயக்கம் ஒன்றை ஆரம்பிப்பது என்று அக்கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

இப்பணிகளுக்காக இரண்டு வண்டிகள் ஒதுக்கப்படும். சிறப்புக் கண்காணிப்பாளர்களும் காவல்துறையைச் சேர்ந்தவர்களும் இப்பணியில் ஈடுபடுவார்கள்.

சமூக நலத்துறைச் செயலாளர் அரிபாஸ்கர், இணைச் செயலாளர் ரங்கமணி, சென்னை மாநகராட்சி விசேஷ அதிகாரி எஸ்.ராமதாஸ், மாநகராட்சி ஆணையாளர் ஆறுமுகம், சென்னை நகரப்போலீஸ் கமிஷனர் ரெங்கசாமி, சட்டத்துறை இணைச்செயலாளர் மற்றும் பலர் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

# குத்தகைதாரருக்கு 75 சதவிகிதச் சட்டம் எப்போது வரும்?

### அமைச்சர் எஸ். டி. எஸ். பேட்டி

**சென்னை. ஜூலை 20- நிலக்குத்தகைதாரர்கட்கு 75 சதவிகிதம்-நிலச் சொந்தக்காரர்கட்கு 25 சதவிகிதம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்ததிட்டத்திற்கு சட்டவடிவம் கொடுக்கும் வேலை நடந்து வருவதாக அமைச்சர் எஸ். டி. எஸ் கூறினார்.**



இதுகுறித்து நிருபர்களிடம் அவர் கூறுகையில் இத்திட்டம் குறுவை அறுவடைக்குள் வராது என்று குறிப்பிட்டார்.

அமைச்சர் எஸ்.டி.எஸ் மேலும் கூறியதாவது:-

மத்திய அரசு நிர்ணயிக்கும் விலையைவிட நெல்லுக்கு கூடுதலாக ரூ. 20 தரப்படும் என்று தமிழக அரசு அறிவித்திருப்பதால் குறுவை சாகுபடி அதிகமாக தஞ்சையில் நடைபெறுகிறது.

பினாமி நிலங்களைக்கைப் பற்ற அரசு சில நடவடிக்கைகளை எடுத்துவருகிறது.

கிராம அதிகாரிகள் கோரிக்கைகளைப் பற்றி அரசு பரிசிலித்துவருகிறது வேலை நிறுத்தம் செய்து வந்த கிராம அதிகாரிகள் கடிதம் எழுதிக் கொடுத்து விட்டு வேலைக்குத் திரும்பி இருக்கிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி,எஸ். கூறினார்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

கப்பட்டுள்ளது.

உணவு இல்லாமல் சில நாட்கள் இருந்துவிட முடியும். ஆனால் குடிநீர் இல்லாமல் இருக்க முடியாது.

உண்ணாவிரதம் இருப்பவர்கள் கூட தண்ணீர் குடிக்காமல் இருக்க முடியாது.

ஆகவேஇந்த அரசுஇதற்கு அதிகநிதி ஒதுக்கிவருகிறது இப்படிப்பட்ட பணிகட்கு நீங்கள் உதவவேண்டும்.

சென்னை நகரில் ஒருவருக்கு 67 முதல் 70லிட்டர் வரை தண்ணீர் தருகிறோம், ஆனால் முன்னேறிய நாடுகளில் தலைக்கு 150 முதல் 200 லிட்டர் வரை தண்ணீர் தரப்படுகிறது.

இதற்கு எல்லாம்அதிகம் செலவிட அரசின் நிதிப் பற்றாக்குறை இருக்கிறது. ஆகவே உங்கள் உதவி இப்படிப்பட்ட பணிகளுக்கு கிடைக்க வேண்டும்

தொழில்களை நடத்தும் போது கொஞ்சநேரத்தை ஏழைகளுக்கு உதவ திட்டமிட்டு ஒதுக்கி உதவ வேண்டும்.

வசதிஅற்ற கிராமங்களை தத்து எடுத்து முன்னேற்றம் பெற வையுங்கள். இதற்கு எல்லாம் உங்கள் ஒத்துழைப்பு தேவை.

உங்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்துக்களை தெரிவிக்கச் சொல்லி இருக்கிறார்.

இவ்வாறு அமைச்சர் ராகவானந்தம் பேசினார்.

விழாஇறுதியில் சி. ஆர். ஆர். பிள்ளை நன்றி கூறினார்.

# துப்புரவு தொழிலாளர்களிடம் அமைச்சர் காளிமுத்து பரிவு

சென்னை ஜூலை 20 சென்னை நகரில் இரவு நேரத் துப்புரவுப்பணிகளை நேற்றுமுன்தினம் இரவு 10 மணியிலிருந்து 12-30 மணிவரை அமைச்சர் காளிமுத்து பார்வையிட்டார்குறளகம் பூ அங்காடிப் பகுதி, என். எஸ். சி. போஸ் சாலை, அண்ணா சாலை, ஜெனரல் பேட்டர்ஸ் சாலை, திருவல்லிக் கேணி ஜாம்பஜார் பகுதி, மயிலாப்பூர், மாம்பலம் ஆகியயிடங்களில் நடந்த இரவு நேர துப்புரவுப் பணிகளை அமைச்சர் காளிமுத்து பாா்வையிட்டார்.

மயிலாப்பூர் மாடவீதியில் பணிபுரிந்த தொழிலாளர்களிடம்இரவுநேரத்தில் உங்களுக்கு தேனீர் வழங்கப்படுகிறதா என்றுகேட்டார். ''இல்லை'' என்று அவர்கள் பதிலளித்தனர்.

இரவு நேரத்தில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கு உற்சாகம் அளிக்கும் வகையில் அவர்களுக்கு ஏன் தேனீர் வழங்கக் கூடாது? என்று அமைச்சர் காளிமுத்து சென்னை மாநகராட்சி தனி அதிகாரியிடம் கேட்டறிந்தார்.

அருகில் எங்கே 'தேனீர் கடை இருக்கிறது என்று கேட்டார்.

அருகேயிருந்த பிரகாஷ் பவனை தொழிலாளர்கள் சுட்டிக்காட்டினர்.

உடனே அனைவரையும் அங்கு போகுமாறு அமைச்சர் காளிமுத்து கேட்டுக் கொண்டார்.

'தேநீர் இல்லை' காபி தான் இருக்கிறது என்று ஓட்டல் உரிமையாளர் கூறினார்.

பரவாயில்லை அனைவருக்கும் காபி கொடுங்கள் என்று அமைச்சர் கூறி மொத்த பணத்தையும் தாமே கொடுப்பதாக முன்வந்தார்.

சென்னை மாநகராசிட் தனி அதிகாரி ராமதாஸ் இரவு நேரத் துப்புரவுத் தொழிலாளர்களுக்கு தேனீர் வழங்கும் திட்டத்தை இன்றே அமல் படுத்தலாம் என்று கூறி மாநகராட்சி சார்பில் காப்பிக்கான தொகையை செலுத்தினார்.

அமைச்சரின் இந்த கனிவான உபசரிப்பைக் கண்டு துப்புரவுத் தொழிலாளர்கள் பெரிதும் மகிழ்ந்தனர்

### ❖ சென்னை நகரில் புதிதாக இணைக்கப்பட்டுள்ள 30 வட்டங்களுக்கு ரூ. 2.6 கோடி செலவில் குடிநீர்த் திட்டம்

### ❖ குடிநீருக்காக இந்த ஆண்டு ரூ. 16 கோடி ஒதுக்கல்

# குடிசைவாசிகளுக்கு சொந்த வீடு



## முதல்வர் புரட்சித்தலைவர் திட்டம்

**சென்னை ஜூலை 20- குடிசை வாழ் மக்களுக்கு பெரும் அளவில் வீடுகளைக் கட்டி அவைகளை அவர்களுக்கே சொந்தமாக்க முதல்வர் புரட்சித்தலைவர் தீவிரமாக ஆலோசித்து வருவதாக அமைச்சர் ராகவானந்தம தெரிவித்தார்.**



சென்னைநகரில்இணைக்கப்பட்ட புறநகர்ப்பகுதிகளுக்கு ரூ. 2.6 கோடி செலவில் குடிநீர் வழங்க திட்டமிடப்பட்டு இருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

ஏழைகளுக்கு உதவும் திட்டங்களுக்கு உதவிபுரியுமாறு ரோட்டரி சங்கத்திற்கு அமைச்சர் வேண்டுகோள் விடுத்தார்.

சென்னை ரோட்டரி சங்க பொன்விழாவை அமைச்சர் ராகவானந்தம் நேற்று மாலை துவக்கி வைத்தார்.

விழாவுக்கு வந்தவர்களை சங்கத்தலைவர் வி. சிதம்பரம் வரவேற்றார்.

டி.சி.கோத்தாரி, வேணுகோபால் சி. கோவிந்த் ஆகியோரும் அந்த விழாவில் பேசினார்கள்.

வழக்கறிஞர் என். சி. ராகவாச்சாரி குடிசை மக்களுக்காக டி.வி. பெட்டியை அமைச்சர் ராகவானந்தத்திடம் அளித்தார்.

சென்னை ரோட்டரி சங்கப் பொன் விழாவினைத் துவக்கிவைத்து அமைச்சர் ராகாவனந்தம் பேசியதாவது:

இந்த விழாவினை முதல்வா புரட்சித் தலைவர் துவக்கி வைப்பதாக இருந்தார். இந்திய அரசியல் சூழ்நிலையில் ஜனநாயகத்தைக் காக்க அவர் டெல்லியில் தங்கியிருக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்.

தனக்குப்பதிலாக இந்த விழாவினைத் துவக்கி வைக்கும்படி எனக்கு உத்தரவிட்டுள்ளார். புரட்சித்தலைவர் இட்ட கட்டளையை ஏற்று இந்த சாதாரண மானவன் இந்த விழாவினைத் துவக்கிவைக்க வந்திருக்கிறேன்.

ரோட்டரிசங்கம்என்றால் பகல்விருந்து தேநீர்விருந்து இரவு விருந்து, பிறகு கலைவது என்று சிலர் கருதக் கூடும்.

ஆனால் ரோட்டரி சங்கத்தினர் சமூகப்பணிகளில் சமுதாய மேம்பாட்டு திட்டங்களை மேற்கொள்கிறார்கள்.

ஏற்கனவே ஒரு கிராமத்தையே தத்து எடுத்து அதனை மேம்படுத்தும் பணியில் ஈடுபட்டுள்ளனர். தாழ்த்தப்பட்ட மக்கள் 110 குடும்பங்கள் உள்ள இடத்திற்கு குடிநீர்வழங்க ஏற்பாடு செய்துள்ளனர்.

பள்ளிகளை நடத்துகிறார்கள். இப்படி பல சமுதாயப் பணிகளை மேற்கொள்கிறார்கள்.

ஏழை மக்களுக்கு உழைக்கும் எண்ணத்தை இதயத்தில் ஏற்றி சமுதாயத்திற்கு கடமை உணர்வோடுசெயல்படுகிறார்கள்.

## குடிசை வாசிகளுக்கு டி.வி.செட்

ரோட்டரி சங்கத்தின் சார்பில்19டி.வி.செட்டுகளை முதல்வர் புரட்சித்தலைவரிடம் தர இருப்பதாக தெரிவித்தனர்.

இந்த டி.வி. பெட்டிகள் குடிசை வாழ்ஏழை மக்கள் பார்க்க வசதியான இடங்களில், போக்குவரத்து பாதிப்பு இல்லாத இடங்களில் வைக்க அரசு ஏற்பாடுசெய்யும்.

நகரிலும் மற்ற இடங்களிலும் குடிசைகள் இருக்கின்றன. அதில் மக்கள் வசிக்கிறார்கள்.

## குடிசைகளை அழிக்கும் தீக்குச்சி

இப்படிப்பட்ட குடிசைப் பகுதிகளை மேம்படுத்த குடிசை மாற்றுவாரியம் அமைக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

ஒரு தீக்குச்சியின் தீச்சுடர் பட்டால் அத்தனை குடிசைகளும் அழிந்து விடுகின்றன.

## வீடுகளை சொந்தமாக்க திட்டம்

ஆகவே இப்படிப்பட்டவர்களுக்கு வீடுகள் கட்டப்படுகின்றன. இப்படி வீடுகளை பெரும்அளவில் கட்டி அவைகளை அவர்களுக்கே சொந்தமாக்க புரட்சித் தலைவர் தீவிரமாக சிந்தித்து வருகிறார்.

இப்படிப்பட்ட பணிகளுக்கு உங்கள் உதவி தேவைப்படுகிறது. உதவ முன்வரவேண்டும்.

குடிநீர் பிரச்சினை இன்னமும் இருக்கிறது. நகரை சுற்றியுள்ள பகுதிகளுக்கு குடிநீர் தரவேண்டியிருக்கிறது.

சென்னை நகரம் விரிவாக்கப்பட்டு இதில்30டிவிஷன்கள் இணைக்கப்படுகின்றன. இந்தப்பகுதிகளுக்குகுடிநீர் தந்தாக வேண்டும்.

இந்தப் பகுதிகளுக்குகுடிநீர் தர ரூ 2.6 கோடி செலவில் திட்டமிடப்பட்டு செயல்படுத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதற்கும் உங்கள் உதவி தேவை.

குடிநீர்திட்டத்தைஅமல்படுத்த திட்டமிடும்போது பஞ்சாயத்துக்கள் குடிநீர் வடிகால் வாரியத்திற்குப் பணம் கட்ட வேண்டியிருக்கிறது.

ஆனால் அந்தப்பணத்தை கட்டமுடியாத பஞ்சாயத்துக்களும் இருக்கின்றன. அப்படிப்பட்ட இடங்களுக்கு உங்கள் உதவி செல்ல வேண்டும்.

புரட்சித்தலைவர் தலைமையில் உள்ள இந்த அரசு கிராம மக்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைக்க தீவிர முயற்சி எடுத்து வருகிறது,

குடிநீர் அற்ற கிராமங்கள் 6 ஆயிரத்திற்கு குடிநீர் கிடைக்க ஏற்பாடு செய்து வருகிறோம்.

1971-ம் ஆண்டுமுதல் 1976-ம் ஆண்டுவரை 5 ஆண்டுக் காலத்தில் குடிநீர் திட்டங்களுக்காக ரூ. 13.36 கோடிதான் செலவிடப்பட்டது.

இந்த ஆட்சி ஏற்பட்டு 2 ஆண்டுகளில் ரூ. 15..5 கோடி, குடிநீர் திட்டங்களுக்காக செலவிடப்பட்டுள்ளது.

இந்த நிதி ஆண்டில் ரூ. 16 கோடி செலவிட ஒதுக்

(1-ம் பத்தி பார்க்க)

# அண்ணா




## குமரி மாவட்ட மாணவ செயல்வீரர்கள் கூட்டம்

நாகர்கோவில். ஜூலை 19 குமரி மாவட்ட மாணவர் கழக செயல்வீரர்கள் கூட்டம் நாஞ்சில்குமார தலைமையில் நாகர்கோவிலில் நடந்தது

மாவட்ட மாணவர் அமைப்பாளர் கோ.ராதாகிருஷ்ணன், சி.பி.ஜோனுஸ் எஸ்.கே.மன்சூர்தீன், ஜே. இஸ்ரேல், ஆர்.எஸ்.ராதாகிருஷ்ணன், வி.சசீதரன், வி.சுகதன், விஜயகுமார், தக்கலைராபி, சிவகுற்றாலம் என்.டி. பிரசன்னகுமார், பன்னீர்செல்வம், சி.கே. முரளி, கே.எஸ்.குமார் மற்றும்பலர் பேசினர்.

## தி.பாறைப்பட்டி

திண்டுக்கல் தி.பாறைப்பட்டியில் பிச்சை முகமது தலைமையில் கழகப் பொதுக்கூட்டம் நடந்தது. எம். குணசேகரன், ஏ. கேசர். கே. ராமச்சந்திரன், டி. பாண்டியன், கு. ப. மகாலிங்கம், ராமநாதன். ப. முருகையா, எம். காந்தி, செல்லமுத்து மற்றும் பலர் பேசினர்.

# இலங்கையில் ஓர் பிரச்னை

## தென்னிலங்கைப் பயணம் -3

### செ. அரங்கநாயகம்

தனி நாடு கேட்கும் கட்சிகளும், இயக்கங்களும் தடை செய்யப்படும்.

அப்படிக் கேட்பவர்கள் தண்டிக்கப்படுவர். 20 ஆண்டு சிறைவாசம் உண்டு.

இந்தப் பிரச்சினை பற்றி விவாதிக்க சர்வகட்சிக் கூட்டம் கூட்டப்படும்.

இது குடியரசுத் தலைவர் ஜெயவர்த்தனாவின் அறிவிப்பு.

இலங்கை தமிழ் விடுதலை முன்னணியினர் வடக்கு கிழக்கு முதலிய தமிழர் வாழும் பகுதிகளைக் கொண்ட தனிநாடு கேட்கின்றனர்; ''தமிழ் ஈழம்'' கோருகின்றனர்.

எதிர்க்கட்சித் தலைவர் திரு. அமிர்தலிங்கம் தலைமையில் இந்தக் கோரிக்கை வலுத்து வருகிறது.

தனிநாடு கோரும் போராட்டம் தீவிரமாக இல்லை யென்று சொல்லி சில இளைஞர்கள் வடக்கு மாகாணத்தில் ''விடுதலைப் புலிகள்'' என்ற இயக்கத்தை நடத்தி வருகின்றனர். இது வன்முறையில் நம்பிக்கைகொண்ட பயங்கர வாதிகளின் இயக்கம்.

அது போதாது என்று கிழக்கு மாகாணத்தில் 'விடுதலைக் கழுகுகள்' தோன்றியுள்ளனர்.

நாங்கள் அங்கிருந்தபோது வந்த செய்திகள்.

யாழ்ப்பாணத்தில் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஞாயிறன்று சுட்டுக் கொல்லப்பட்டார். தமிழர்கள் அதிகமாக வாழும் வடக்கு மாகாணத்தில் சென்ற இரண்டு ஆண்டுகளில் பயங்கரவாதிகளால் கொல்லப்பட்ட போலீசாரின் எண்ணிக்கை பதினைந்து.

போலீஸ் இன்ஸ்பெக்டர்குருசாமி யாழ்ப்பாணத்தில் உள்ள தன் வீட்டில் உணவருந்திக் கொண்டிருந்தார். சைக்கிளில் சில அடையாளம் தெரியாத இளைஞர்கள் அங்கு வந்தனர். அவரைச் சுட்டுவிட்டு தப்பி விட்டனர். விடுதலைப் புலிகள் என்ற தமிழ் இளைஞர் இயக்கத்தைச் சேர்ந்தவர்களாக இவர்கள் இருக்கலாம் என் போலீசார் கூறுகின்றனர்.

இதுவரை கொலை செய்யப்பட்ட போலீசாரில் பெரும்பாலோர் தமிழர்களே!

வெள்ள செட்டித்துறையில் நடுத்தர வயதுள்ள, சரணராஜா - சந்திராதேவி தம்பதியினர் கொல்லப் பட்டனர்.

போலீசாருக்கு தகவல்கள் சேகரித்துத் தந்தனர் என்பதற்காக சுடப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

இன்னொரு சுவையான செய்தி.

ஓவியர் மஞ்சுசிறி யாழ்ப்பாணத்தில் தாக்கப்பட்டதாகச் செய்தி.

கூடச்சென்ற இரு அமெரிக்கர்கள் அதற்குச் சாட்சிகள்.

அடுத்தநாள் எதிர்க்கட்சித்தலைவர் திரு. அமிர்தலிங்கம் இவ்வன்முறைச் செயலைக்கண்டித்து அறிக்கை விடுகிறார்.

இறுதியில் ஓவியர் மஞ்சுசிறி தாக்கப்படவில்லை விபத்துக்குத்தான் ஆளானர் என விசாரித்த போலீசார் விபரம் தெரிவிக்கின்றனர்.

திரு. மஞ்சுசிறியை நிருபர்கள் சந்தித்துக் கேட்டால் என்ன நடந்தது என்று எனக்கே தெரியாது என்கிறார்.

இப்படிப்பட்ட செய்திகள் இலங்கைப் பிரச்சினையை வளர்க்க உதவுமே தவிர தீர்க்க உதவாது.

**இலங்கையின் வளத்துக்குக் காரணம் மலைப் பகுதியில் அமைந்துள்ள தேயிலைத் தோட்டங்களே.**

**அவற்றை உருவாக்கியவர்கள் நமது தமிழகத்திலிருந்து உழைக்கச்சென்ற இந்தியத் தமிழர்கள்**

அவர்கள் யாழ்ப்பாணத் தமிழரோடு இல்லை.

இந்தியத் தமிழர்களை வெளியேற்றப் பாராளுமன்றத்தில் தீர்மானம் வந்தபோது 20 சதவீதம் சிங்கள எம்.பிக்கள் ஆதரித்தனராம். 25 சதவீதம் தமிழ் எம்.பிக்கள் ஆதரவு தந்தனராம். எனவே இரு வகைத் தமிழரிடையே ஒற்றுமையில்லை.

முஸ்லிம்கள் தமிழ்தான் பேசுகின்றனர். ஆனால் தமிழர் என்று சொல்லிக்கொள்வதில்லை.

இந்தியத் தமிழர்களிலேயும் அங்கே இருக்க அனுமதி பெற்றவர்கள் ஒரு பகுதி. கொஞ்ச நாளைக் குப்பிறகு அகதிகளாக இந்தியா திரும்ப வேண்டியவர்கள் ஒரு பகுதி.

தமிழர்கள் பற்றிய கோரிக்கைகள் அனைத்துத் தமிழராலும் ஆதரிக்கப்படாத நிலைமையை தமிழர்களே உருவாக்கியுள்ளனர். அதனால் தமிழரின் கோரிக்கைகளை நிறைவேற்றுவதில்அரசு மெத்தனமாக இருக்க நேரிட்டிருக்கிறது,

தமிழர்கள் அதிருப்தியும் வளர்ந்து கொண்டிருக்கிறது.

போதாக் குறைக்கு பெரும்பான்மையினரான சிங்கள இனத்தைச் சார்ந்த சில தலைவர்களின் பேச்சு பிரிவினை உணர்வை மேலும் தூண்டுவதாக அமைந்துள்ளது.

உதாரணமாக ஜான் கொத்தலாவலை பழைய பிரதமர்; வயதானவர். அவர் மருத்துவமனையிலிருந்து ஒரு அறிக்கை விடுகிறார்.

கொழும்புவில் உள்ள அரசு அலுவலகங்கள் யாழ்ப்பாணத் தமிழர்கள் நிறையப் பேர் வேலையிலிருக்கின்றனர். அவர்களை கொழும்புவை விட்டுத் துரத்தினால், தமிழர்கள் என்ன செய்வார்கள்? பிரிவினைக் கோரிக்கையை விட்டுவிடுவார்கள்.

பிச்சைக்காரர்களைப் போல் அடித்துத் துரத்த வேண்டும் என்கிறார்.

இது பிரச்சினைக்குப் பரிகாரமாகவில்லை: விடுதலைப்புலிகளின் வாதத்தைப் பலப்படுத்துகிறது.

இத்தகைய வாதப் பிரதிவாதங்களுக்கிடையே சாதாரண மக்களின் வாழ்க்கைப் பிரச்சினை-பெருமளவு அலட்சியப்படுத்தப்பட்டு வருகிறது.

**அனைத்துத் தலைவர்களும் ஒருவரையொருவர் மதித்துக் கூடிக்கலந்து பேசுவார்களேயானல் ஒரு நியாயமான வழி அனைவருக்கும் திப்ருதியளிக்கும் வகையில் காணமுடியும்**

இலங்கை அமைதியும், வளமும் நிறைந்தநாடாக இருக்கவேண்டும் என்பதுதான் நமது விருப்பம்,

(வளரும்)

## ஹஜ் செல்லும் பயணிகளுக்கு அறிவிப்பு

சென்னை, ஜூலை 20- ஹஜ் செல்லவிருக்கும் புனிதப் பயணிகள். ஹஜ் பயணத்துக்கான விண்ணப்பத்தில் தங்களுடைய சொந்த மாநிலத்தை விட்டு, மற்ற ஒரு மாநிலத்திலிருந்து விண்ணப்பித்தல். தவறான வயதைக் குறிப்பிட்டிருத்தல் அல்லது முதன்மை விண்ணப்பதாரருடன் அவரது தந்தைவழி, தாய்வழி உறவினர் எனப் பொய்யாகக் குறிப்பிட்டிருத்தல் போன்ற தவறான தகவல்கள் கொடுத்திருந்தால் அல்லது பம்பாய் ஹஜ்குழு வழங்கியுள்ள கட்டளைக் குறிப்புகளுக்கு மாறாகவோ அல்லது புறம்பாகவோ நடந்திருந்தால். அத்தவறுகள் ஆய்வில்கண்டுபிடிக்கப் படுமானல், அவர்களது பயணத்திற்கான அனுமதி ரத்து செய்யப்படும் என ஹஜ் செல்லவிருக்கும் பயணிகளுக்கு பம்பாய் ஹஜ்குழுதெரிவித்துள்ளது

## பேச்சாளர் முகவரி

செஞ்சி அலி அகமத்
எம்.ஆர்.பி.இல்லம்
30 விழுப்புரம்சாலை
செஞ்சி 604 202.

### நாடு இருக்கும் நிலையில் எதற்கெடுத்தாலும் போராட்டமா?

# கருணாநிதிக்கு சிலம்புச் செல்வர் கண்டனம்

**சென்னை, ஜூலை 20- நாடு தற்போது இருக்கும் சூழ்நிலையில் எதற்கெடுத்தாலும் போராட்டம் தேவை தானா என்று சிலம்புச் செல்வர் ம.பொ.சி., கருணாநிதிக்குக் கண்டனம் தெரிவித்தார்.**

பெரம்பூரில் உள்ள ரயில்வே தொழிலாளர்கள் சங்கக் கட்டிடத்தில் சிலம்புச் செல்வர் ம.பொ.சி.யின் 74-வது பிறந்த நாள் விழா நடந்தது. பல அறிஞர்கள் ம. பொ. சி.யைப் பாராட்டிப் பேசினர்.

பாராட்டுகளுக்கு நன்றி தெரிவித்து சிலம்புச் செல்வர் ம. பொ. சி. பேசியதாவது:

ரெயில்வே தொழிலாளர்கள் சங்கத்தின் சார்பில் நடக்கும் விழாவில் பங்கு பெறுவதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

தொழிலாளர் இயக்கம் கட்சிபேதங்களுக்கு அப்பாற்பட்டு நடக்கவேண்டும் என்று அன்றும் கூறினேன், இன்றும் கூறிவருகிறேன். அந்த தொழில் உறவு இன்றும் நீங்கிவிடவில்லை. இந்த விழா சிறப்பினை என்றென்றும் மறக்க மாட்டேன்.

திராவிட இயக்கத்தார் என் சேவைக்கு காட்டிவரும் மரியாதையை நான் சொல்லுவதைவிட சின்ன அண்ணாமலை சொல்லுவது மிகவும் நன்றாக இருக்கும்.

இன்றையதினம் நமது நாட்டில் நம்மைச் சுற்றி என்னென்னவோ நடக்கிறது.

### வேதனை

டெல்லி பாதுஷா காலத்தில் நடந்த தவறுகள் திரும்பி வருகின்றனவோ என்று எண்ணி வேதனையடைகிறேன்.

உலக வல்லரசுகள் நம்மைக் கூர்ந்து கவனிக்கின்றன. அமெரிக்கா கவலையோடு கூர்ந்து கவனித்து வருகிறது என்று செய்தி வருகிறது. நம்மைச்சுற்றிலும் உள்ள 80 கோடி ஜனத் தொகை கொண்ட சீனா, 12 கோடி ஜனத்தொகை கொண்ட பாகிஸ்தான் நம்மால் புத்துயிர் பெற்ற வங்க தேசம் நம்முடன் அன்புடன் இல்லை.

கட்சி வெறிச் சண்டைகள் உள்ள நமதுநாட்டை கடவுளே காப்பாராக என்று பிரார்த்திப்பதைத் தவிர வேறு என்ன உள்ளது?

ஒவ்வொரு தலைவரும் உள்ள குறைபாட்டை அறிந்துகொள்ள நல்லநிலை ஏற்பட்டுள்ளது.

நாடு, தலைவன் இல்லாமல் உள்ளது. காமராஜர் இல்லையே என்ற ஏக்கம் உள்ளது. காமராஜர் இருந்திருந்தால் தைரியமாக இருக்கும். தைரியத்துடன் வழிகாட்டும் துணிவு அவருக்குத்தான் இருந்தது.

''என்னையா வேண்டாம் என்கிறாய்' நீ வேண்டாம் என்கிறார்''- ஒருவர்.

நால்வர் போட்டியிடுகின்றனர்.

நால்வரில்யாரையாவது ஒருவரைத்தானே தேர்ந்தெடுக்க முடியும்? நால்வரும் நான் வரவேண்டும் என்ற போதுதான் பிரச்சினை ஏற்படுகிறது.

இதனை பார்க்கும்போது



நம்மிடம் தியாக உணர்வு போய்விட்டதே என்று நினைக்கத் தோன்றுகிறது.

நாம் அனுபவிக்கும் சுதந்திரம்தியாகத்தால்வந்தது. திருப்பூர் குமரன், வ. உ. சியின் தியாகத்தைப் பற்றி பேசுவதில் தவறு இல்லை. அதற்கு ஏற்ற தியாக உணர்வு நம்மிடம் இல்லையே? அந்த தியாக உணர்வு நால்வரில் ஒருவருக்கும் இல்லையே? நாடு ஏளனம் செய்யாதா என்று வேதனைப்படுகிறேன்.

ஒரு விஷயத்தில் உறுதியாக இருக்கின்றனர். தேர்தல் வரக்கூடாது என்பதுதான் அது. ''இவர் வரக்கூடாது நான்'' என்ற நிலை உள்

(2-ம் பக்கம் பார்க்க)

### ★ நமது பார்லிமென்டரி முறையில் மாறுதல் தேவை ★ ஜனதிபதிக்கு வந்திருக்கும பெரிய தலைவலி,

ஜனதிபதியை சந்தித்துவருகிறார்கள். எனக்குத்தான் பெரும்பான்மை உள்ளது என்று 75 பேரை வைத்துக் கொண்டு கேட்கிறார் ஒருவர்.

எனக்கு அதிகாரம் கொடுத்தால் பெரும்பான்மை கிடைத்துவிடும் என்கிறார் ஒருவர்.

ஜாமீன் போன கட்சிகளும் அதிகாரத்தைக் கேட்கின்றன.

இந்த நேரத்தில் எனது பார்லிமெண்டரிஅனுபவங்களைக் கூற இதுதான் சந்தர்ப்பம் என்று கருதி இந்தக் கருத்துக்களைச் சொல்கிறேன்.

இருக்கும் மரபுப்படி பிரதான எதிர்க்கட்சித் தலைவரை அழைத்து ஜனதிபதி பேசியிருக்கிறார்.

''இருக்கிற ஆட்சியை நகர்த்திவிட்ட நீ ஆட்சி எடுக்கத் தயாராக இருக்கிறாயா?'' இல்லையே! ஏன்?

நமது பார்லிமெண்டரி முறையில்மாறுதல்தேவை. அதை யோசிக்கும் காலம் வந்துவிட்டது.

ஜனநாயகத்திலும்

## புதிய 4-வது வட்ட செயல் வீரர் கூட்டம்

சென்னை, ஜூலை. 20- சென்னை புதிய 4-வது வட்ட கழகச் செயல் வீரர்கள் கூட்டம் வருகிற 21-ந் தேதியன்றுமாலை7 மணிக்கு ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி அமைப்பாளர் வண்ணை சண்முகம்தலைமையில் புது வண்ணை டி, எச். சாலை 732 எண்ணுள்ள இடத்தில் நடக்கிறது. கூட்டத்தில் கழகத் தோழர்கள் திரளாக கலந்துகொள்ளுமாறு வட்ட அமைப்பாளர் சோ. கணேசன் கேட்டுக்கொண்டுள்ளார்.



(8-ம் பத்தி தொடர்ச்சி)

தினர். ஏவி.எம். குமரன். மங்கபதி, பிலிம் நியூஸ் ஆனந்தன், ரகு, ஆகியோருக்கு சால்வைகள் அணிவித்தார்.

சீர்காழி கோவிந்தராஜனுக்கு ம. பொ. சி. பொன்னாடைஅணிவித்தார், சிவசிதம்பரத்துக்குஅமைச்சர் ஆர்.எம்.வீ. பொன்னாடை அணிவித்தார்.

சீர்காழி கோவிந்தராஜனுக்கு சிவகுமார் எல்.ஆர். ஈஸ்வரி. அஞ்சலி, சூலமங்கலம் சகோதரிகள், பி. சுசீலா, ஜானகி, எம்.ஆர். விஜயா, பி.பி. சீனிவாஸ், பத்திரிகையாளர்கள் சார்பில் சீதாராமன் ஆகியோர் மாலை அணிவித்தனர்.

## ★ கழகச் செய்திகள் ★

### அணைக்கட்டு

21-7-79 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு ஆர். என். ஆர்- திடலில் பி. கே. மணி தலைமையில் பேசுவோர் கோட்டம்பாக்கம் குமார், இரா. ச. மாறன் சோ. மு. மணி எம், சொக்கலிங்கம், ஆர். கிருஷ்ணசாமி, வெ. பெருமாள் மி. து. பாலகிருஷ்ணன், பி. பஞ்சசிலன் சி. வேணு, தா. தனஞ்செழியன் மற்றும் பலர்.

### சத்தியமங்கலம்

22-7-79 ஞாயிறு மாலை 7 மணிக்கு சத்திரங்க சமுத்திரம் முன்னாள் தபால் ஆபீஸ் மைதானம் அருகே எஸ். என் சுகுமாரன் தலைமையில் பேசுவோர்: திண்டுக்கல் பாண்டியன், கே.ஏ. செங்கோட்டையன் எம். எல். ஏ, ஆர். ரங்கசாமி, எஸ்.ஆர். துரைசாமி, எஸ். ஜி. கண்ணப்பன், மற்றும்பலர்

### ஒட்டன்சத்திரம்

22-7-79 ஞாயிறு மாலை 7-மணிக்கு அண்ணா திடலில் எஸ். பி. முருகேசன் தலைமையில் பேசுவோர்: மதுரை இளவரசன், எஸ். ராமலிங்கம், எஸ். கே. திருமலைசாமி, ஆர். சண்முகம், பி. போஸ், பழனிச்சாமி- ஆர்.பி. ராமசாமி, எஸ், ராமமூர்த்தி, எஸ். காதர்சா, கே, துக்கையப்பன் மற்றும் பலர்,

# அமைச்சர் ஆர். எம். வீ. வேண்டுகோள்..

(3ம் பக்கத் தொடர்ச்சி)

மண வீட்டிலும் வைக்க வேண்டுமா என்றால்---

'இல்லாவிட்டால் கூட்டம் வரவில்லை' என்கின்றனர்.

ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் மிகவும் முக்கியமானது திருமண நிகழ்ச்சி. அங்குகூடத் தமிழிசை இடம்பெறவில்லை யென்றால் எப்படி?

எத்தனையோதேவையற்ற சடங்குகள் திருமணத்தில் நடக்கின்றன. தமிழிசையை வைத்துக்கொள்வதில் ஏன் தயக்கம்?

அறநிலையத்துறையில் கோவில்களிலாவது பாடுகின்ற வாய்ப்பு வேண்டும் என்று இசைக்கலைஞர்கள் வருகிறார்கள் என்பதை மிகவும் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

புரிகின்ற மொழியில் புரிகின்ற ராகத்தில் பாடி மக்களைக் கவராததால், நீங்கள் தொடவேண்டிய மக்களைத் தொடாததால் அவர்கள் எங்கோ போய் விட்டார்கள்.

திருமண காலம் வந்தால் நமது இசைப் புலவர்களுக்கு பெரும் வாய்ப்பு கிடைக்கிறது. இல்லந்தோறும் தமிழிசைமுழங்குகிறது என்ற நிலை ஏற்பட வேண்டும்.

இசைத்தட்டினுடைய அட்டையில் குறிப்புகள் யாவும் ஆங்கிலத்திலேயே உள்ளன. லண்டனில் நடந்த இசைநிகழ்ச்சி என்பதால் ஆங்கிலத்திலேயே குறிப்புகளை அட்டையில் போட்டுள்ளார்களோ என்று கருதுகிறேன்.

இந்த இசைத்தட்டை வாங்கக் கூடியவர்கள் தமிழ்நாட்டில் உள்ளவர்கள் அல்லது வெளிநாட்டில் உள்ள தமிழர்கள்தான். இசைக்காக வெளிநாட்டினர் வாங்கினாலும் குறைந்த எண்ணிக்கையாகத்தான் இருப்பார்கள்.

ஆகையால் இனிமேல் இசைத்தட்டின் மேல் அட்டையில் தமிழ் குறிப்புகள் இடம்பெறச் செய்ய வேண்டும். அத்துடன் ஆங்கிலக் குறிப்புகளும் இருக்கலாம். இதைக் குறையாகக் கூறவில்லை. தமிழ்க் குறிப்புகள் இடம் பெற வேண்டும். இசைத்தட்டை வாங்குகின்றவர்களுக்குப் பயன்படவேண்டும் என்பதற்காகக் கூறுகின்றேன்.

இசைத் தட்டின் விலை 85ரூபாய் வைத்துள்ளனர் விலை குறைவாக இருந்தால் எல்லோரும் வாங்குகின்ற வாய்ப்பு ஏற்படும். அதனையும் பரிசிலனை செய்யும்படி இசைத்தட்டு நிறுவனத்தினரைக் கேட்டுக் கொள்கிறேன்.

தமிழ்க்கலை, தமிழர் பண்பாடு சிறக்க தமிழ் மக்கள் ரசிக்கும் வகையில் தமிழிசையை வளர்க்கும் சீர்காழி கோவிந்தராஜன் பாடிப் பாடி பெரும் புகழ் பெற வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

### ம. பொ. சி.

தலைமை வகித்த ம. பொ. சி. பேசும்போது கூறியதாவது:

''மருத்துவக் கல்லூரியில் படிக்கும் தனது மகன் சிவசிதம்பரத்தையும் தனக்கு வாரிசாக சீர்காழி கோவிந்தராஜன் இசைத் துறையில் ஈடுபடச் செய்வதற்காக பாராட்டுகிறேன்.

சிலருக்கு இதைப்போல் செய்ய பயமாக இருக்கும். இசையில் ஈடுபடச் செய்தால் கல்லூரிப் படிப்பு கெட்டுவிடுமோ என்று அஞ்சுவர்,

இசையில் ஈடுபடுவதால் படிப்பு கெட்டுப்போகாது. இருக்கின்ற அலுப்புபோகும். படிப்பில் ஏதாவது சிரமம் இருந்தால் இரண்டு பாசுரங்களைப் பாடினால் அது மறைந்துபோகும்.

இசைத்தட்டு சுதந்திரப் போராட்டக் காலத்தில் மிகவும் உதவியாக இருந்தது. அப்போதிருந்த அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்து வீரமாக இசைத் தட்டை வெளியிட்ட தேசபக்தர் ஏவி.எம். தேசபக்தர்களில் ஒருவன் என்ற முறையில் அதற்காகவும் இன்று இதுபோன்ற இசைத்தட்டுகள் வெளிவரக் காரணமாக இருப்பதற்காகவும் ஏவி. எம். அவர்களைப் பாராட்டுகிறேன்.

சீர்காழி கோவிந்தராஜன் லண்டன் சென்று இசை நிகழ்ச்சி நடத்தியது இன்று இசைத்தட்டாக வெளிவந்துள்ளது. இதைப் போல்உலகநாடுகள்எல்லாவற்றிற்கும் சென்று அவை யாவும் இசைத்தட்டுகளாக வெளிவர வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

இவ்வாறு ம.பொ.சி. கூறினர்.

### டி.வி.என்.

தமிழ்நாடு இயல் இசை நாடகமன்றச் செயலாளர் டி. வி. என். பேசும்போது கூறியதாவது:-

''சீர்காழி சாரீர வளம் பெற்றவர். சிலர் தமிழில் தான் பாடுகிறார்கள். எனினும் அது என்னமொழி என்று புரிந்துகொள்ள முடியவில்லை.

சீர்காழி கோவிந்தராஜன் தண்டபாணி தேசிகர் பரம்பரையில் இன்னிசை வேந்தராகத் திகழ்கிறார். சீர்காழி பாடும்போது தமிழின் இனிமை கூடுகிறது.

சங்கீத கலா மேதைகள் தமிழிலேயே பாடல்களைப் பாட வேண்டும்.

இவ்வாறு டி. வி. நாராயணசாமி கூறினர்.

எம். எல். வசந்தகுமாரி பேசும்போது ''கர்நாடக சங்கீதத்தை சாஸ்திரிய முறைப்படி கற்றுக்கொண்டால் எந்த மொழியிலும் பாடலாம். சங்கீதக்காரர்களையெல்லாம் கூட்டி பாடவைத்து பெருமைப் படுத்தியவர் ஏவி. எம்.'' என்று கூறினர்.

பட அதிபர் ஏவி.எம், பேசும்போது, சீர்காழி கோவிந்தராஜன் இன்னும் இருநாட்களில் சிங்கப்பூர், கோலாலம்பூர், தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்கு செல்லப் போவதையும் தமிழ் பக்திப்பாடல்களை கர்நாடக இசையில் பாடுவதில் சீர்காழி முதன்மை பெற்றவர்என்பதையும்கூறினர்

சிவசிதம்பரம் தமிழ் வாழ்த்துப்பாடல் பாடினா. மத்தாய் வரவேற்றார். சீர்காழி கோவிந்தராசன் ஏற்புரை கூறினர். மங்கபதி நன்றி கூறினர்.

### பொன்னாடை

அமைச்சர் ஆர்.எம்.வீ., சிலம்புச் செல்வர் ம.பொ.சி., ஏவி. எம். ஆகியோருக்கு சீர்காழி பொன்னாடை போர்த்

(5ம் பத்தி பார்க்க)